# அருள்மிகு ஸ்ரீ ஆதிவேங்கடேசபெருமாள் /ஸ்ரீ தேவி பூதேவி சமேத ஸ்ரீ வரதராஜபெருமாள் திருக்கோவில்




| | | |
|---|---|---|
| மூலவர் | : | ஸ்ரீ ஆதிவேங்கடேசபெருமாள் /ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீ வரதராஜபெருமாள் |
| உற்சவர் | : | போக சீனிவாசன், ராதா ருக்மணி சமேத வேனுகோபலசுவாமி |
| அம்மன்தாயார்/ | : | ---------------------------- |
| தல விருட்சம் | : | ---------------------------- |
| தீர்த்தம் | : | ---------------------------- |
| ஆகமம்பூஜை/ | : | பாஞ்சராத்திரம் |
| பழமை | : | 600 ஆண்டுகளுக்கு மேல் |

**புராண பெயர்** : அனுமன் விழி,அனுமன் மந்தை.

**ஊர்** : அனுமந்தை

**மாவட்டம்** : விழுப்புரம்

**மாநிலம்** : தமிழ்நாடு

**பாடியவர்கள்**: --

**திருவிழா**

1. சித்திரை மாதம் லக்ஷதீபம் உற்சவம் ,

2. வைகாசி விசாகம் கருட சேவை உற்சவம் ,

3. ஆடி மாதம் ஆண்டாள் ஆடிபுரம் உற்சவம் ,

4. ஆவணி மாதம் கோகுல அஷ்டமி உற்சவம் மற்றும் சுவாமி திருக்கல்யாணம் ,

5. புரட்டாசி மாதம் 4 சனிக்கிழமை சுவாமி ஆலய உள் புறப்பாடு மற்றும் 3 ம் சனிக்கிழமை உற்சவம்.

6. மார்கழி மாதம் வைகுண்ட ஏகாதசி உற்சவம் மற்றும் திருப்பாவை பாராயண சேவை மற்றும் ஹனுமந் ஜெயந்தி உற்சவம்.

7. தை மாதம் ஆண்டாள் திருக்கல்யாணம் ,

8. மாசி மாதம் மாசி மக கடல் தீர்த்த வாரி ,

9. பங்குனி மாதம் இராமநவமி உற்சவம் மற்றும் மாதம் தோறும் ஆழ்வார்கள் திருநக்ஷத்ரம் வைபவம் .

10. தவிரமாதந்தோறும் இக்கோயிலில் திருவிழாக்கள் நடந்தவண்ணம் இருக்கும். வாரத்தின் சனிக்கிழமைகளிலும் கோயிலில் பக்தர்கள் வருகை அதிகமாக இருக்கும்.



## தல சிறப்பு

9 அடி உயரமுள்ள திருப்பதி வெங்கடாஜலபதி சிலை எங்கள் ஊரில் அமைந்துள்ளது தனிச்சிறப்பு ஆகும். கருவறையில் இரண்டு மூலவர்கள் இருப்பது சிறப்பு. 500 வருடங்களாக தொடர்ந்து பாகவதர்களால் நாலாயிர பிரபந்த பஜனை செய்து வருகின்றனர்.

## திறக்கும் நேரம்:

காலை 6 மணி முதல் 11 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 8 மணி வரை திறந்திருக்கும்.

## முகவரி:

அருள்மிகு ஆதிவேங்கடேசபெருமாள்/ஸ்ரீவரதராஜபெருமாள் திருக்கோவில்,அனுமந்தை & அஞ்சல்- 604303.
மரக்காணம் வட்டம், விழுப்புரம் மாவட்டம். (வழி: சென்னை TO புதுச்சேரி ECR சாலையில் அமைந்துள்ளது. புதுச்சேரியில் இருந்து 27 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது .)

## பொது தகவல்:

அனுமன் உருவமான குரங்குகள் அதிகமாக இங்கு இன்றளவும் மந்தையாக இருந்து வாழ்ந்து கொண்டு இருப்பதால் அனுமந்தை என பெயர் கொண்டுள்ளது.

## பிரார்த்தனை:

குழந்தை பாக்கியம் கிடைக்க , திருமணம் விரைவில் கைகூட வேண்டிக்கொள்ளலாம்.

## நேர்த்திக்கடன்:

எடைக்கு எடை சில்லரையை காணிக்கையாக துலாபாரம்செலுத்துகிறார்கள் மற்றும் அனுமானுக்கு வடைமாலை நேர்த்திக்கடன் நிறைவேற்றுகிறார்கள்.



## தலவரலாறு:

இராவணன் இராமபிரான் மனைவி சீதையை கடத்தி சென்றான். இராமபிரான் தன் மனைவி சீதையை மீட்க தன் போர்படை களுடன் இலங்கைக்கு சென்றார் முன்னொரு காலத்தில். அப்போது இராமபிரான் மற்றும் அனுமனின் மந்தைகளும் தங்கி சென்ற இடமாதலால் அனுமன் மந்தை என பெயர் எற்பட்டது . அதுவே தற்போது மருவி அனுமந்தை என்று பெயர் பெற்றது.

## தலபெருமை:

திருமலையில் இருக்கும் வேங்கடாஜலபதிக்கு லக்ஷ்மி வராகார் எப்படி இடம் கொடுத்தாரோ , அது போல ஆதிவெங்கடேசபெருமளுக்கு ஸ்ரீ வரதராஜபெருமாள் இங்கு இடம் கொடுத்தார் .மற்றும் இத்தலத்தில் ஸ்ரீ விநாயகர் தும்பிக்கைஆழ்வாராக சேவை கொடுக்கிறார் .



தொடர்புக்கு:

வரதராஜபெருமாள் பட்டர் (**திருக்கோவில்** அர்ச்சகர்)

+91-9626093444 ,+91-9025682443